


சிவமயம்

# உழவாரம்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

மலர் 13 ] ஜனவரி 1998 [ இதழ் 7

பெருமைதரு ஆசிரியர் : M. கண்ணப்ப செட்டியார்
(நிருவாக இயக்குநர், ஸ்ரீ மங்கையர்க்கரசி ஆலை)




திருக்கயிலாய பரம்பரை திருவாவடுதுறை ஆதீனம் குருமுதல்வர்

**அருள்திரு நமசிவாய மூர்த்திகள்**

குருபூஜைநாள் 3–2–1998






1998 ஜனவரி
மலர் 15
இதழ் 7

மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத் திங்கள் இதழ்

<u>நமது சிந்தனைக்கு :</u>

'உனக்கே பொறை ஆனேன்'

மண்ணின் மேல்மயங் கிக்கிடப் பேனை
  வலிய வந்தெனை ஆண்டுகொண் டானே
கண்ணி லேன்உடம் பில்அடுநோயாற்
  கருத்தழிந்(து) உனக்கே பொறை யானேன்
தெண்நி லாஎறிக் குஞ்சடையானே
  தேனே திருவாவடு துறையுள்
அண்ண லேயெனை அஞ்சல்என் றருளாய்
  யார்எனக்(கு) உற(வு) அமரர்களேறே.

—சுந்தரர்

இப்பூமியில் உன்னை யறியாது மயங்கி உழன்று கிடக்க விருந்த என்னைக் கருணையினாலே வலிய வந்து திருவெண்ணெய் நல்லூரிலே உனக்கு ஆளாக்கிக் கொண்டவனே, நான் ஒரு கண் இல்லாதவனாயிருக்கிறேன். மேலும் உடம்பில் வந்து வருத்துகின்ற நோயால் மனம் (உன்னை நினைக்கும் செயலற்று உனக்கே வீண் சுமையாக என்னைக் காக்கும் பாரத்தை உன்மேல் வைத்தவனாக ஆகியிருக்கிறேன். தெளிந்த களங்கமற்ற ஒளி வீசும் சடையுடையவனே, தேவ தேவனே, திருவாவடுதுறை துறையில் எழுந்தருளிய பெருமானே, தேவர்களுக்கெல்லாம் தலைவனே, என்னை 'அஞ்சாதே' என்று அருள் செய்வாயாக. உன்னையன்றி வேறு யார் எனக்கு உற்ற உறவினர்? ஒருவருமில்லை.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# துறைசை ஆதீனம் குருமுதல்வர் அருள் வரலாற்றுச் சுருக்கம்

உலகம் ஓர் குலம்; உலகு அனைத்தும் இன்புறவேண்டும்' என்ற பரந்த மனம் படைத்தது ஆசாரியப் பரம்பரை. திருக்கயிலையில் உண்டாகிய இப்பரம்பரை காலம் பல கடந்து இடையறாது இந்நாள் வரை வளர்ந்து வருகிறது. கயிலைப்பரம்பரையின் மெய்கண்ட சந்தான ஆசாரியர்களில் ஸ்ரீ உமாபதி சிவாசாரியரிடம் உபதேசம் பெற்ற ஸ்ரீ அருணமச்சிவாயரிடம் தீட்சை பெற்றவர் ஸ்ரீசித்தர் சிவப்பிரகாசர். அவரிடம் சிவஞான அபிஷேகமும், ஆசாரிய பரம்பரையைப் பாதுகாத்துவர திரு ஆணையும் பெற்று திருவாவடுதுறையில் ஆதீனத்தைத் தோற்றுவித்த முதற்பெரும் குருமூர்த்திகள் ஸ்ரீநமசிவாயமூர்த்திகள்.

இவர்கள் சோழ மண்டலத்தில் மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள மூவலூரில் பரம்பரை சைவ வேளாளர் குலத்தில் தோன்றியவர்கள். இவர்களது பிள்ளைத் திருநாமம் வைத்தியநாதன் என்பதே. இளம் பிராயத்தில் இவர்கள் தம் பெற்றோருடன் புள்ளிருக்கு வேளூரில் (வைதீஸ்வரன்கோயில்) ஸ்ரீவைத்தியநாதப் பெருமானை வழிபட்டுத் திருவருளில் ஒன்றிய சிந்தையினராக மனமுருகி நின்றபோது, பெருமானே ஓர் சிவாசாரியர் திருமேனி தாங்கிவந்து சிவலிங்கத் திருமேனி ஒன்றினைத் தந்தருளிய, பேறுடையவர்கள்.

தல !யாத்திரையாக தம் அடியார் திருக்கூட்டத்துடன் மூவலூர் சேர்ந்த ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர் சிறிய பெருந்தகையாக விளங்கிய வைத்தியநாதனைக் கண்டார்கள். சிவஞானப் பேற்றிற்கு உரிய குறிகளும் திருவருட் குறிப்பையும் உணர்ந்து பெற்றோர் இசைவுடன் பிள்ளையைத் தம்முடன் அழைத்துக் கொண்டு திருவாவடுதுறையை அடைந்தார்கள்.

அங்கு ஸ்ரீ சித்தர் சிவப்பிரகாசர் அப்பிள்ளைக்கு ஞான தீக்கை புரிந்து **''நமசிவாயம்''** என தீட்சாநாமம் சாத்தி, குருபரம்பரையில் தாம் பெற்ற சிவஞான உபதேசத்தை அருளிச் சிவஞானானந்த அனுபவம் கைவருமாறு அநுக்கிரகம் செய்தார்கள். குருமரபில் தாம்பெற்ற ஸ்ரீ உமாபதி சிவாசாரியார் பூஜை

செய்த ஸ்ரீஞானமா நடராஜப் பெருமானையும், தம்முடைய ஆத்மார்த்த மூர்த்தியையும் பூஜித்துவரும் அதிகாரத்தையும் வழங்கினார்கள். தாம் வீற்றிருந்த இடத்தில் வரைகிறி அமைக்கப் பெற்ற அறையுள் அமர்ந்து சைவ சித்தாந்த மரபுதழைக்க சிவ ஞானோபதேசம் செய்துவர ஆணையருளி, தாம் திருமறைக் காட்டிற்குச் சென்றருளினார்கள்.

ஸ்ரீநமசிவாய தேசிக மூர்த்திகள் தம் ஞானாசிரியர் திருவாணையின் வண்ணம் அவர் வகுத்த அறையிலிருந்து, வரும் பக்குவ ஆன்மாக்களுக்கு சிவஞான உபதேசம் அருளி சுத்தாத்வித சைவ சித்தாந்த பரிபாலனம் செய்துவந்தார்கள்.

இவ்வண்ணம் ஆதீன முதற்பெரும் குருமூர்த்திகளாக வீற்றிருந்து சுத்தாத்வித சைவசித்தாந்த நன்மரபு தழைக்கச்செய்த ஸ்ரீ நமசிவாய மூர்த்திகள் தங்கள் குருசந்தானம் வளர்ந்தோங்கிவர அம்பலவாண தேசிகருக்கு ஞானாபிஷேகம் செய்து துவிதிய ஆசாரியராக அமைத்து ஒரு மாதம் அசுபதி நன்னாளில் சித்தாந்த சுத்தாத்வித முக்தி அடைந்தருளினார்கள்.

பிரதிவருடம் தை மாதம் அசுவதி நன்னாளில் (மகரத் தலைநாள்) முதற்பெரும் குருமூர்த்திகளாக விளங்கிய ஸ்ரீநமசிவாய மூர்த்திகளின் குருபூஜை வழிபாடுகள் சிறப்பாக நடைபெற்றுவருகின்றன.

## குருமரபு வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பானு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

— தவத்திரு **மாதவச் சிவஞான முனிவர்**



# உழைப்பும் உயர்வும்

**(தருமையாதீனம் 26 ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்)**

''நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரும் நாடு''

[விடுதலை பெற்று இருபத்தைந்து ஆண்டுகளைக் கடந்திருக்கும் நாம் விடுதலையின் பயனை அடைவதற்குப் பொறுப்பும் கடமையுணர்ச்சியும் உழைப்பும் இன்றியமையாதன என்பதனை விளக்கி, தேசபக்தியும் - தெய்வபக்தியும் இருகண்களாகப் போற்ற வேண்டுவன என்பதனையும் வலியுறுத்தி நிற்கிறது இக்கட்டுரை.]

**விடுதலை வெள்ளிவிழா :**

''நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாமென்று மீளா ஆளாய்க்
கொய்மலர்ச்சே வடிஇணையே குறுகி னோமே.''

பண்டைக் காலந் தொட்டே பலவகைப் பண்பாடும் பெற்று விளங்கும் நமது பாரத நாடு இடையில் இரண்டு நூற்றாண்டுகள் அந்நியர் ஆட்சியில் தன்னுரிமை இழந்து நின்று, மீளவும் தன்னுரிமை பெற்று, 25 ஆவது ஆண்டில் வெள்ளி விழாக் காண்கின்றன. இவ்விழா நாடெங்கும் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது

**மக்களாட்சியில் நமது கடமை**

தன்னுரிமை யாவது **ஜனநாயகம்** அல்லது **மக்களாட்சி.** இம் மக்களாட்சியில் எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள், 'மன்னர்கள்' என்று சொல்லும்போது எல்லோர்க்கும் மகிழ்ச்சி தான். ஆனால் குடிமக்களாய் இருக்கும் நிலையைவிட, மன்னர்களான நிலையில் ஒவ்வொருவருக்கும் பொறுப்பும்

கடமையும் அதிகமாகின்றன. ஆயினும் மக்கள் பொறுப்புணர்ச்சியை விடுத்து, உரிமையைத்தான் கொண்டாடுகிறார்கள். ஜனநாயகம் என்பது எல்லோரும் உழைத்து வாழ்வதேயன்றி, பிறர் உழைக்கத்தாம் சும்மா இருந்து சுகம் பெறுவதல்ல. இயற்கை நியதியும், உழைத்து வாழ அமைந்திருக்கின்றதேயன்றி, சும்மா இருந்து வாழ்வதாக அமையவில்லை. அமைக்கப்படவும் இல்லை.

**இறைவன் திருவுள்ளம் :**

'உயர்வு' என்பது உழைப்பினால் வருவதேயன்றிச் சோம்பலால் வருவதன்று. ஆயினும், உழைப்பு இல்லாதவர்கள் உழைப்பினால் உயர்வு பெற்றிருப்பவர்களைக் கண்டு மனம் புழுங்குவது தவிர, உழைத்து முன்னேற முயல்வதில்லை. அந்நிலையில் உள்ளவர்களையும் உழைத்து முன்னேறச் செய்வதே மக்கள் அரசாங்கத்தின் மாட்சிமிக்க மாபெரும் கடமை. பொறுப்பு, கடமையுணர்ச்சி, உழைப்பு முதலிய பண்பாடுகளும் அவ்வவ் உயிர்களின் அறிவு நிலைக்கு ஏற்பவே அமைவன. இயற்கையில் அறிவுத்திறன் பெற்றவர்கள் எவ்வகையிலோ உழைத்து முன்னேறிவிடுகின்றனர். அவர்கள் மற்றவர்களையும் அந்நிலைக்குக் கொண்டுவர முயலுதல் வேண்டும். உலகத்தைப் படைத்த இறைவன் திருவுளக் குறிப்பும் அதுவே. பிறந்த குழந்தை உழைக்க இயலாதவரையில், அதற்குத் தாய் பால்கொடுத்து வளர்க்கின்றாள். வளர்ந்தபின் அது தானே பிழைத்துக் கொள்ளுகிறது. வளர்ந்து பலர்க்த உதவியும் புரிகின்றது.

**சமுதாயத்தில் பல்லோர் கடன் :**

பறவை விலங்கு முதலிய பலவும் முதலில் தம் தாயின் உதவி பெற்று வளர்ந்து, பின் தம் இனத்திற்குப் பயன் தருகின்றன. ஆடு, மாடுகள் மக்கட்கும் பயன்பட்டு உதவி செய்தல் வெளிப்படை. தாவரங்களும் முளைக்கும்பொழுது விதையில் உள்ள உணவை உண்டு, பின் மக்கட்கும் பறவை விலங்கு முதலியனவற்றிற்கும் பயன் தருகின்றன. இஃது இயற்கை நியதியாய் உள்ளது. இவ்வாறே பிறர் உதவியால் வளர்ந்து, பின் தமது உழைப்பினால் செல்வத்தைப் பெருக்கிக்கொண்ட மக்களும் அச்செல்வம் பிறர்க்கும் பயன்படச்செய்து வாழ்தல் வேண்டும். செல்வத்தைப் பிறர்க்கு ஈயும் ஈகை என்பது இங்குப் பிறர் உழைப்பிற்கு உதவிசெய்து, பின் உழைப்பிற்கு ஏற்ப

ஊதியம் பெறச் செய்வதையே குறிக்கும். இவ்வுதவி நாட்டிற்கு நலம் பயப்பதாதலைச் செல்வர்கள் எண்ணிப் பார்த்தல் வேண்டும். இத்தகைய நாட்டுப்பற்று ஒவ்வொருவருக்கும் உண்டாகி விடுமாயின் நமது நாடு பொன்னாடாய் விளங்கும். தேசப்பற்று மக்களிடம் உண்டாகிவிடுமாயின், கடமை உணர்ச்சி தானாகவே வந்துவிடும். பின் அவரவர்களது கடமையில் அவரவரும் தவறாது நிற்பர்.

இம்முறையில், உழைத்துப் பெருக்கிய செல்வம் படைத்தோர், அதனைப் பிறர்க்கு ஈந்து அவர்களையும் பயனடையச் செய்தல் வேண்டும்.

''செல்வத்துப் பயனே ஈதல்;
துய்ப்பே மெனினே தப்புந பலவே''

என்று சங்கத்துச் சான்றோரும்,

''பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்றுள் எல்லாம் தலை''

என்று திருவள்ளுவரும் கூறுகின்றபடி, செல்வத்தைப் பலர்க்கும் பயன்படச் செய்தல் செல்வர்களது கடமையாகும்.

**வெள்ளிவிழா வாழ்த்து :**

இத்தகைய பகுத்துண்டலே இன்று நம் ஜனநாயகத்தில் வேண்டத்தக்கது. இந்நிலை இயற்கையில் நிகழுமாறு அமைந்த அமைப்புக்களே தேவாலய மடாலயங்கள். பகுத்துண்ணும் நிலை, இவைகளில் இறையுணர்வோடு இயற்கையில் நிகழ்கின்றது. இவற்றையெல்லாம் உணர்ந்து, உழைப்பும், உதவியும் ஒற்றுமையும் வளர இறையருளை முன்னிட்டு முயல்வதே இன்று நாம் கொண்டாட வேண்டிய உண்மை வெள்ளி விழாவாகும். அத்தகைய விழா எங்கும் நிகழ்ந்து, யாவர்க்கும் பயனளிக்க, செந்தமிழ்ச் சொக்கர் திருவருளை நினைத்து,

வாழ்க தன்னுரிமை ! வளர்க பாரத நாட்டு வளம் !!

என்று வாழ்த்துகிறோம்!

நன்றி—''**திருவருட் செய்தி**''



தலவரலாறு

## திருப்பழனம்

தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றுக்கு மிக அருகில் விளங்குவது திருப்பழனம். கும்பகோணத்திலிருந்து திருவையாறு செல்லும் பேருந்துச் சாலையில் 30 கி.மீட்டர் தூரத்தில் உள்ளது. திருவையாற்றிலிருந்து 4 கி.மீட்டர் தூரத்தில் உள்ளது. புகை வண்டி வழியாக வருவோர் தஞ்சாவூரிலிருந்து திருவையாறு வந்து இத்தலத்தை அடையலாம்.

திருவையாற்று சப்தஸ்தானத் தலங்களுள் இத்தலமும் ஒன்று. பழனம் வயல், வயல்களால் சூழப் பெற்றதலமாதலின் இத்தலம் திருப்பழனம் எனப் பெற்றது.

அப்பூதி அடிகளின் அவதாரத் தலமாகிய திங்களூர் இத் தலத்திற்கு அருகில் உள்ளது. அப்பரடிகள் அப்பூதி அடிகளாருடைய தொண்டினைச் சிறப்பித்துப் பாடிய திருத்தலம்.

**கோயிலமைப்பு :**

ஊர் சோலைகளால் சூழப்பெற்றுள்ளது. பேருந்துச் சாலைக்கு மிக அருகில் கோயில் அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதி. கோயில் மிகப் பழமையானதாய் உள்ளது. இராஜகோபுரம் ஐந்து நிலைகளோடு பழுதுற்ற நிலையில் காணப்படுகிறது. இராஜகோபுரத்தைக் கடந்தவுடன் வடபுறம் தீர்த்தம் உள்ளது. மிகவும் பழுதடைந்தும் தூர்ந்தும் உள்ளது. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. இரண்டாம் கோபுரம் மூன்று நிலைகளோடு விளங்குகிறது. வெளிப்பிராகாரத்தின் வடபுறம் சுவாமிக்கு இடது பாகத்தில் அம்பாள்கோயில் கிழக்கு நோக்கி உள்ளது.

நந்தி பலிபீடங்களைக் கடந்து கோயிலை அடைந்தவுடன் பெரிய முன்மண்டபம் காணப்படுகிறது. வாயிலைக்கடந்து கோயிலுக்குள் நுழைந்தவுடன் மகாமண்டபம் உள்ளது. உட் பிராகாரத்தில் தென்மேற்கு மூலையில் தல விநாயகர் எழுந்தருளியுள்ளார். அடுத்து சோமாஸ்கந்தர் கோயில் அதை அடுத்து சப்தஸ்தான லிங்கங்கள் வேணுகோபாலர் கஜலக்ஷ்மி ஆகியோர் விளங்குகின்றனர். வடக்குப் பிராகாரத்தில் துர்க்கை சண்டேசர் கோயில்கள் உள்ளன. கர்ப்பக்கிருகக் கோஷ்டங்களில் தக்ஷிணா மூர்த்தி துர்க்கை முதலியோர் உள்ளனர். சுவாமி விமானம் முழுவதும் கருங்கல் திருப்பணி. வேணுகோபாலர் சந்நிதி இக்

கோயிலில் உள்ளது. கர்ப்பக்கிருகத்தில் வராகமூர்த்தி சிலை உள்ளது. சுவாமி சந்நிதியில் விநாயகர் துவாரபாலகர்கள் உள்ளனர். இறைவனை வழிபடும்போது நம்மனம் மகிழ்ச்சிக் கடலில் திளைக்கிறது. அப்பர் சுவாமிகள் தம்மைநாயகியாகப் பாவித்து இறைவனிடம் தூது விடுத்துப் பாடிய பாடல்கள் பலவும் நம் நினைவிற்கு வருகின்றன.

''மண்பொருந்தி வாழ்பவருக்கும் மாதீர்த்த வேதியர்க்கும்
விண்பொருந்து தேவர்க்கும் வீடுபேறாய் நின்றானை
பண்பொருந்த இசைபாடும் பழனம்சேர் அப்பனை என்
கண்பொருந்தும் போழ்தத்தும் கைவிடநான் கடவேனோ''

என்று இறைவனிடம் ஆராக்காதல் கொண்டு அப்பரடிகள் பாடியருளிய தேவாரத் திருப்பாடலை நாமும் ஓதி வழிபட்டு மீள்கின்றோம்.

தனியறையில் உற்சவமூர்த்திகள் பாதுகாப்பாக எழுந்தருளுவிக்கப்பட்டுள்ளன. வழிபட்டு அம்பாள் கோயிலை அடைகிறோம்.

சுவாமிக்கு இடப்பாகத்தில் மணக்கோலத்தோடு அம்மை விளங்குவது இக்கோயிலுக்குரிய சிறப்புகளில் ஒன்று.

**மூர்த்திகள் :**

சுவாமி பெயர் ஸ்ரீ ஆபத்சகாயேசுவரர், அம்பாள் பெயர் ஸ்ரீ பெரியநாயகி. தீர்த்தம் — காவிரி.

திருவையாற்றுச் சப்தஸ்தானத் தலங்களில் இரண்டாவதாக விளங்குவது இந்தலம். சித்திரைப்பூரணையில் திருவையாற்றிலிருந்து ஸ்ரீ சுயம்பிரகாசை அம்மையோடு நந்தி பெருமானும் ஸ்ரீ அறம்வளர்த்த நாயகியாரோடு ஐயாறப்பரும் அலங்கரிக்கப் பெற்ற கண்ணாடிப் பல்லக்கில் எழுந்தருளி ஏழூர் வலம்வருவர். ஒவ்வொருதலத்திலும் அவ்வத்தலமூர்த்திகளோடு எழுந்தருள்விக்கப்பெற்றும் சோடச உபசார தீபாராதனைகள் நிகழ்த்தப் பெற்றும் பின் அவ்வத்தலமூர்த்திகளோடு எழுந்தருளிவலம்வரும் சப்தஸ்தானத் திருவிழா புகழ்பெற்ற விழாவாகும். சப்தஸ்தானத் தலங்கள் திருவையாறு, திருப்பழனம், திருச்சோற்றுத்துறை. திருவேதிகுடி, திருக்கண்டியூர், திருப்பூந்துருத்தி, திருநெய்த் தானம் ஆகிய ஊர்களாகும்.

**அப்பூதி அடிகள் :**

இவர் திருப்பழனத்திற்கு அருகில் உள்ள திங்களூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். சிவபிரானிடத்தில் பேரன்புடையவர். திருநாவுக்கரசரின் பெருமையைக் கேள்வியுற்று அவரைக் காணுதற்கு முன்னமே அவர்பால் பக்திகொண்டு தம் மனையிலுள்ள அளவைகள் நிறைகோல் மக்கள் பசுக்கள் முதலானவற்றிற்கெல்லாம் திருநாவுக்கரசரின் பெயரைவைத்து வழங்கினார். தாம் கட்டிய திருமடங்கள் தண்ணீர்ப்பந்தல் ஆகியவற்றுக்கெல்லாம் அவர் பெயரை வைத்து வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து வந்தார். ஒருநாள் திருநாவுக்கரசர் திருப்பழனத்தை வணங்கித் திங்களூருக்கருகில் வரும்போது தம்பெயரால் தண்ணீர்ப்பந்தர் இருப்பதைக்கண்டு அதனை அமைத்த அப்பூதி அடிகளைக் காண அவர்தம் வீட்டிற்கு எழுந்தருளினார். தம்மை வணங்கி வரவேற்ற அப்பூதி அடிகளிடம் நீர் வைத்த தண்ணீர்ப்பந்தலில் நும் பெயர் எழுதாது வேறு ஒருவர் பெயர் எழுதக்காரணம் யாதெனவினவினார். அப்பூதியார் 'அப்பரடிகள் பெயரை வேறொருவர் பேர்' எனக் கூறக் கேட்டு வெகுண்டு அப்பரடிகளை அறியாத நீர்யார்? என வினவினார். வந்தவர் திருநாவுக்கரசரே என்பதை அறிந்தவுடன் அப்பூதி அடிகளார்க்கு எல்லையற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. அப்பூதியாரும் அவர்தம் மனைவியாரும் அப்பரடிகளை உள்ளே அழைத்துச் சென்று திருவமுது கொண்டருளுமாறு வேண்டினர். அரசும் அதற்கு இசைந்தார். திருவமுதமைத்து மூத்த திருநாவுக்கரசை வாழைக்குருத்து அரிந்து வருமாறு பணித்தனர். அப்பிள்ளை வாழைக்குருத்தரியும் போது பாம்பு ஒன்று அவரைத் தீண்டியது: விட வேகம் தலைக்கேறுமுன் தன் பணியைச் செய்து முடித்துத் தாயிடம் இலையைத் தந்து கீழே வீழ்ந்து இறந்தான். அப்பூதியாரும் அவர்தம் துணைவியாரும் அடியார் திருவமுது செய்யத் தாழ்த்தல் கூடாதென்று கருதி இறந்த பிள்ளையைப் பாயில் மறைத்துவிட்டு அப்பரை அமுது செய்விக்க முற்பட்டனர். அப்பர் மூத்த பிள்ளையாரை அழைக்கச்சொன்னார். அப்பூதியார் 'இப்போது இங்கு அவன் உதவான்' என்றார். அப்பரடிகள் நிகழ்ந்ததை அறிந்து இறந்த பிள்ளையை எடுத்துவரச் செய்து திருக்கோயிலுக்கு முன்னால் கிடத்தி 'ஒன்று கொலாம்' என்ற பதிகம்பாடி உயிர்பெற்றெழச் செய்தருளியபின்னர், அப்பூதியார் இல்லத்தில் அமுதுசெய்து சிலநாட்கள் அவர்தம் இல்லத்தில் தங்கித் திருப்பழனம் சென்று அப்பூதி அடிகளையும் சிறப்பித்துப் போற்றிப் பதிகம்பாடி இறைவனை வணங்கினார்.

# பதிகப் பெருவழி—50

## திருப்பழனத்திருப்பதிகம்

### திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது

திருப்பதிக வரலாறு

திருவடகுரங்காடுதுறையில் வாலியார் வழிபட்ட அருமையை யமைத்துப் பாடிப்பரவி; பிற தலங்களையும் வழிபட எழுந்தருளிய காழி வேந்தர், முத்தலைச் சூலம் ஏந்திய முதல்வர் எழுந்தருளிய திருப்பழனத்தைச் சேர்ந்தார். கோயிலைக் குறுகி உருகிய மனத்துடன் திருப்பழனநாதரை வணங்கி 'வேத மோதி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார். இதனை 'விழை சொற் பதிகம்' என விசேடிப்பர் சேக்கிழார் பெருமானார்.

**பண்—தக்கேசி**

திருச்சிற்றம்பலம்

வேதமோதி வெண்ணூல்பூண்டு வெள்ளையெருதேறிப்
பூதஞ்சூழப் பொலியவருவார் புலியினுரிதோலார்
நாதாவெனவு நக்காவெனவு நம்பாவென நின்று
பாதந்தொழுவார் பாவந்தீர்ப்பார் பழன நகராரே. 1

தம்மை நாதா எனவும் நக்கா எனவும் தோத்திரிப்பவர்களின் பாவந்தீர்ப்பவர் பழனநகரார். நக்கன் - நிர்வாணி· நம்பன் - நம்பத்தக்கவன்.

கண்மேற்கண்ணுஞ் சடைமேற்பிறையும் உடையார் காலனைப்
புண்ணாருதிர மெதிராறோடப் பொன்றப்புறந்தாளால்
எண்ணாதுதைத்தவெந்தை பெருமான் இமவான்மகளோடும்
பண்ணார்களிவண் டறைபூஞ்சோலைப் பழனநகராரே. 2

காலனை இரத்தம் பெருகக் காலால் உதைத்த பெருமான் உமையம்மையோடு எழுந்தருளிய இடம் பழன நகர். கண்மேற் கண் – நெற்றிவிழி.

பிறையும்புனலுஞ் சடைமேலுடையார் பறைபோல் விழிகட்
உறையுமயான மிடமாவுடையார் உலகர்தலைமகன் [பேய்
அறையுமலர் கொண்டடியார்பரவி யாடல்பாடல்செய்
பறையுஞ்சங்கும் பலியுமோவாப் பழனநகராரே. 3

*கங்கையும் பிறையும் சூடியவர், இடுகாட்டை உறைவிடமாகக் கொண்டவர். உலக மக்களின் தலைவர்.*

உரமன்னுயர்கோட் டுலறு கூகை யலறுமயானத்தில்
இரவிற்பூதம் பாடவாடி யெழிலாரலர்மேலைப்
பிரமன்தலையில் நறவமேற்ற பெம்மானெமையாளும்
பரமன் பகவன் பரமேச்சுவரன் பழனநகராரே. 4

*கூகை அலறும் மயானத்தில் பூதம்பாட நள்ளிருளில் நட்டமாடுபவர். பிரமகபாலத்தில் பலியேற்பவர். எம்மை ஆட்கொண்டருளும் பரமர்.*

குலவெஞ்சிலையான் மதில்மூன்றெரித்த கொல்லேறுடை
கலவமயிலுங்குயிலும் பயிலுங்கடல் போற்காவேரி (யண்ணல்
நலமஞ்சுடைய நறுமாங்கனிகள் குதிகொண்டெதிருந்திப்
பலவின்கனிகள் திரை முன்சேர்க்கும் பழனநகராரே. 5

*மலைவில்லால் முப்புரங்களை எரித்தவர். விடை ஊர்தியர் பயிலும் குயிலும் பாடக் காவிரி தன் அலைகளால் பலவின் கனிகளையும் மாங்கனிகளையும் சேர்க்கும் பழனத்தை நகராக உடையவர்.*

வீளைக்குரலும் விளிச்சங்கொலியும் விழவின்னொலியோவா
மூளைத்தலைகொண் டடியாரேத்தப் பொடியாமதிளெய்தார்
ஈளைப்படுகில் இலையார்தெங்கிற் குலையார்வாழையின்
பாளைக்கமுகின் பழம்வீழ்சோலைப் பழன நகராரே 6

*அடியார்கள் கையில் கபாலங்கொண்டு ஏத்தி வழிபடும் இறைவர். படுகையில் தென்னை வாழை கமுகு இவற்றின் பழம் விழுகின்ற வளமுடையதும் விழவின் ஒலி ஓவாததும் ஆகிய பழனநகரார்.*

பொய்யாமொழியார் முறையாலேத்திப் புகழ்வார் திருமேனி
செய்யார்ற்கரிய மிடற்றார் வெண்ணூல் சேர்ந்தவகலத்தார்
கையாடலினார் புனலான்மல்கு சடைமேற்பிறையோடும்
பையாடரவ முடனே வைத்தார் பழனநகராரே. 7

உண்மை அடியார்களால் வழிபடப் பெறுபவர். செம் மேனியின்; நீலகண்டர். வெண்ணூலணிந்த மார்பினர். கைகளை வீசி ஆடுபவர், சடைமேற் கங்கையும் பிறையும் பாம்பும் அணிந்தவர்.

மஞ்சோங்குயர முடையான்மலையைமாறாயெடுத்தான் தோள்
அஞ்சோடஞ்சு மாறுநான்கு மடரவூன்றினார்
நஞ்சார்சுடலைப் பொடிநீறணிந்த நம்பான் வம்பாரும்
பைந்தாமரைகள் கழனிசூழ்ந்த பழன நகராரே. 8

கயிலைமலையை எடுத்த இராவணனது இருபது தோள்களும் வருந்துமாறு காலால் ஊன்றியவர். நீறணிந்தவர்.

கடியார்கொன்றைச் சுரும்பின்மாலை கமழ்புன்சடையார்விண்
முடியாப்படிமூ வடியாலுலக முழுதுந்தாவிய
நெடியான் நீள்தா மரைமேலயனு நேடிக்காணாத
படியார்பொடியா டகலமுடையார் பழனநகராரே. 9

கொன்றைமாலை அணிந்தவர். உலகை மூவடியால் அளந்த திருமாலும் அயனும் தேடிக் கண்டுபிடிக்க முடியாத திருநீற்றழகர்.

கண்டான்கழுவா முன்னேயோடிக் கலவைக்கஞ்சிய
உண்டாங்கவர்க ளுரைக்குஞ்சிறுசொல் லோரார்பராட்ட
வண்டாமரையின் மலர்மேல்நறவ மதுவாய்மிகவுண்டு
பண்டான்கெழும வண்டியாழ்செய்யும் பழனநகராரே. 10

கண்ணைக்கூடக் கழுவாது கஞ்சி குடிக்கும் புறச் சமயிகளுடைய சிறுசொல்லை ஓராத அடியார்கள் பாராட்ட இருப்பவர் பழனத்திறைவர்.

வேய்முத்தோங்கி விரைமுன்பரக்கும் வேணு
புரந்தன்னுள்
நாவுய்த்தனைய திறலான்மிக்க ஞானசம்பந்தன்
பேசற்கினிய பாடல்பயிலும் பெருமான்பழனத்தை
வாயிற்பொலிந்த மாலை பத்தும் வல்லார் நல்லாரே. 11

பேசற்கினிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் வல்லவர் நல்லவர்.

## தைமாத அடியவர் வழிபாடு

சண்டேச நாயனார் (18—1—98)

வேதத்தின் பயன் சைவம் இவ்வேதவொலியுடைய சேய்ஞ்ஞலூரில் எச்சதத்தன் என்ற மறையவரின் மகனாகத் தோன்றியவர் விசாரசருமர். பசுக்கள் பேணப்படாததைக் கண்ணுற்ற விசாரசருமர் தாமே அச்செயலை மேற்கொண்டார். அப்பாலகர் மண்ணினால் சிவலிங்கமமைத்து சொரிந்த பாலை திருமஞ்சனமாட்டி அங்குள்ள பூவினால் அருச்சனை செய்தார். தந்தையார் ஒருநாள் அவரது வழிபாட்டை நிகழ வொடாமல் தடுத்தார். சிவ அபராதத்திற்காக தந்தையின் காலைத்துண்டித்தார். சிவபெருமான் காட்சிதந்து 'சண்டேசப்பதம்' அளித்தருளினார். மகனார் பாலகனாயிருந்தும் சிவவழிபாட்டில் ஈடுபடவும், தந்தையார் சிவவழிபாட்டைச் சிதைக்கவும் வந்தது அவரவரின் முன்னைய நல்வினை தீவினைப் பயனை உணர்த்துவதாகிறது. சண்டேசநாயனாரின் குருபூசை தைத்திங்கள் உத்திரம் நன்னாளாகும்.

திருநீலகண்ட நாயனார் (22—1—98)

சிதம்பரத்தில் குயவர் குலத்தில் பிறந்தவர் திருநீலகண்டர் இளைஞராயிருந்தும் சிவனிடத்தில் மிகுந்த அன்பும் பக்தியுமுடையவராயிருந்தார். தன் மனைவியாரின் திருநீலகண்டத்தின் மீது ஆணையின் காரணமாக தானும் மனைவியும் இல்லறத்துறவு கொண்டு வாழ்ந்தனர். அடியவராக வந்த சிவபெருமானின் திருவிளையாடலால் இவரது ஒழுக்கத்தின் மேன்மை உலகோர் அறியக் கிடைத்தது. திருநீலகண்டநாயனாரின் குருபூசை நாள் தைத் திங்கள் விசாகம் நன்னாள்.

### அப்பூதியடிகள் நாயனார் (30—1—98)

அப்பூதியார், திங்களூரில் மறையவர் குலத்தில் பிறந்தவர் திருநாவுக்கரசு நாயனாரின் பெருமையைக் கேள்விப்பட்டு அவர் மேல் மிகுந்த அன்பும் பக்தியும் கொண்டு வாழ்ந்தவர். நேரில், திருநாவுக்கரசர் வந்த சமயத்திலும், அவரின் பெருமையைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பும் பெற்றார். சிவனடியாரிடம் அன்பு செலுத்தி வாழ்ந்து முத்திப்பேறு பெற்றார். அவரது குருபூசை நாள்' தைத்திங்கள் சதயம் நன்னாள்.

### கலிக்கம்ப நாயனார் (2—2—98)

திருப்பெண்ணாகடத்தில் கலிக்கம்பர், சிவனடியார் களைச் !சிவனாகப்பாவித்து] வாழ்ந்து முத்திப்பேறு பெற்றவர். கலிக்கம்பநாயனார் குருபூசை நாள் தைத் திங்கள் ⌊ரேவதி நன்னாள்.

### கண்ணப்பநாயனார் (7—2—98)

திருக்காளத்திமலையருகே உடுப்பூரில் வேடுவகுல அரச குமாரனாகப்பிறந்தவர். திண்ணன் வேட்டைக்குசென்ற பொழுது திருக்காளத்தி மலைமீது எழுந்தருளியிருக்கும் குடுமித்தேவர் பால், முன்னைத்தவப் பயனால், மிகுந்த பேரன்பு உண்டா யிற்று. அன்றாடம் ஆகம வழி பூசையை ஏற்றருளும் குடுமித் தேவராகிய சிவபெருமான், திண்ணனார் செய்திட்ட ஞான பூஜையையும், ஊனுக்கு ஊன்மருந்திட்ட 'கண்ணைப்பறித்து' சிவபெருமான் கண்ணில் அப்பிய திண்ணனாரின் பேரன்பின் திறத்தையும் உலகறியச் செய்து, கண்ணப்பர் எனத்திருநாம மளித்து, கண்ணப்பருக்குப் பெருமான், முத்தி அளித்தார். குருபூஜை நாள் தைத்திங்கள் மிருகசிரிட நன்னாளாகும்.

### அரிவாட்டாய நாயனார் (9—2—98)

காவிரி நாட்டில் கணமங்கலம் என்னும் ஊரில் வேளாளர் குடியில் பிறந்தவர் நாயனார். இறைவனுக்கு நாள் தோறும் செந்நெல் அரிசியும் செங்கீரையும் மாவடுவும் நிவேதனமாக அளித்து வந்தார். தாம் வறுமையுற்ற போதும் தனது சிவப் பணியை செய்துவந்தார். ஒரு நாள் தனது உடல்தளர்ச்சியால் தாம் கொண்டு சென்ற உணவு சிதற, தம் திருத்தொண்டிற்கு முட்டுப்பாடு நேர்ந்ததே என உயிரைப் போக்க முற்பட்டபோது

சிவபெருமான் தடுத்தனர். அரிவாட்டாயர் என்ற பெயர் பெற்று சிவத்தொண்டு செய்து முத்திப் பேறுபெற்றார். குருபூசைநாள் தைத்திங்கள் திருவாதிரை நன்னாள்.

இந்த நாயன்மார்களின் குருபூசை நாட்களில் மதுரை பன்னிருதிருமுறை மன்றத்தினர் அ/மி மீனாக்ஷி சுந்தரேசுவரர் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் நாயனாருக்கு காலையில் வழிபாடு செய்து மாலையில் திருத்தொண்டர் புராண சிந்தனை மேற்கொள்வர்.

**C.S. சொக்கலிங்கம்**

# மணிவாசகர் சுட்டும் சிவன் விகிர்த வடிவங்கள்

முனைவர். **சிவ. திருச்சிற்றம்பலம்**, தமிழ் ஆய்வுத்துறை
அரசு ஆடவர் கல்லூரி, கும்பகோணம்

**சிவன் விகிர்தன் :**

நாளும் இன்னிசையால் நற்றமிழ் பரப்பிய ஞானசம்பந்தர் சிவன் வடிவ நிலைகள் பலவற்றைச் சுட்டியுள்ள நிலையில் சிவனை 'விகிர்தத்துருக் கொள்விமலன் என்று குறிப்பிட்டுள்ளார். ஒன்றுக்கொன்று எதிர்மறையாய் முரண்பட்டு வேறாயும் உடனாயும் நிற்கும் 'நிலை விகிர்தநிலை எனப்பெறும். இதனை சம்பந்தரே.

'வேறும் உடனுமாம் விகிர்தர் அவர்'

'வேறாய் உடனானான்'

எனவருந்தொடர்களால் விளக்கிப்போந்துள்ளார்.

**விகிர்த வடிவ மாண்பு :**

சிவபெருமானுடைய பல்வேறு வடிவ நிலைகளில் இவ் விகிர்த வடிவமே காலத்தால் அழியாத காலத்தைக் கடந்த சிவ பெருமானுடைய தன்னிகரற்ற சிறப்பியல்புகளை உணர்த்தி நிற்பதாகும். நேற்று இன்று நாளை எனப்பெறும் முக்காலத்தும் மாறாத, மாற்ற இயலாத, உலகியற்பொருளாகவும், அவை அல்லனவாயும் எங்கும் பரந்து நிறைந்து காணப்பெறும் சிவன் தோற்ற நிலைகளை இதற்கு மேலும் விளக்கியுரைக்க இயலாது என்றே கூறலாம். இவ்வுண்மையினைச் சம்பந்தர்

'அல்லர் ஆவர் என நின்ற பெம்மான்
உண்டு இலையென்றே நின்றே'

எனும் தொடர்களால் புலப்படுத்தியுள்ளார்.

**மணிவாசகரும் விகிர்தசிவனும் :**

வான்கலந்த மாணிக்கவாசகர் தம் வாசகத்துள் சிவபெருமானுடைய பல்வேறு வடிவங்களைச் சுட்டியுள்ள நிலையில் சிவனை,

'மின்னாருருவ விகிர்தா'
'விகிர்தா'
'விரைசேர் சரணவிகிர்தா'

எனும் தொடர்களால் சிவபெருமானை விகிர்தனாய் விளித்து மகிழ்கின்றார்.

**திருப்பொற்சுண்ணப்பாடல் :**

எங்கும் எதிலும் முரண்பட்டு நிறைந்து நிற்கும் சிவன் விகிர்த வடிவினை மணிவாசகர் திருவாசகத் திருப்பொற் சுண்ண ஈற்றுப்பாடலில்

வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்மையும் ஆயினார்க்கு
சோதியுமாய் இருள் ஆயினார்க்கு
துன்பமுமாய் இன்பம் ஆயினார்க்கு
பாதியுமாய் முற்றும் ஆயினார்க்கு
பந்தமுமாய் வீடும் ஆயினார்க்கு
ஆதியும் அந்தமும் ஆயினார்க்கு
ஆடற்பொற்சுண்ணம் இடித்து நாமே

என்று குறிப்பிட்டுள்ளார்.

**தோற்ற முரண் :**

சிவன் ஆதியும் அந்தமும் இல்லா நிலையில் ஆதியும் அந்தமும் ஆயினான் என்று சுட்டியுள்ள மணிவாசகர், சிவன் வடிவத் தோற்றமுரண்களே மேலும் 'ஏகன் அநேகன், 'சேயாய் நணியானே, 'பாரார் விசும்புளார்' என வருந் தொடர்களாலும் சுட்டியுள்ளார். மேலும் 'ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே என்றும் குறித்துள்ளார்.

**நிலைமுரண் :**

கடவுள் உள்பொருளாகவும் இல்பொருளாயும் உள்ள, முரணிய நிலையை

'யாவையுமாய் அல்லையுமாய்,

'உண்மையுமாய் இன்மையுமாய்,

என வருந்தொடர்களால் குறித்துக் காட்டியுள்ளார்.

**இயல்பு முரண் :**

'வெய்யாய் தணியாய் 'அரியாய் எளியாய் எனும் வாசகத் தொடர்கள் சிவன் முரண் இயல்புகளைத் தெற்றெனக் காட்டி நிற்கின்றன.

**வடிவ முரண் :**

வடிவ நிலைகளுள் சிவன் முரண் தன்மைகளை மாணிக்கவாசகர்.

'அருவமும் உருவமும் ஆனாய்'

'சோதியனே துன்னிருளே'

'பாதியுமாய் முற்றும் ஆயினார்'

'பெண்ணாகி ஆணாய் அலியாய்'

என வருந்தொடர்களால் உணர்த்தியுள்ளார்.

**செயல் முரண் :**

உலகம் யாவையும் தாமுளவாக்கலும் நிலைபெறுத்தலும் நீக்கலும் நீங்கலா அலகிலா விளையாட்டுடைத் தலைவனாம் சிவ பெருமான் தன் முரண் செயல்களை

'ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய்'

எனும் தொடர்வாயிலாக மணிவாசகர் குறித்துள்ளார்.

**தன்மை முரண் :**

'தேறும் வகை நீ, திகைப்பும் நீ தீமை நன்மை முழுவதும் நீ என்று சிவன் முரண் தன்மைகளைச் சுட்டியுள்ள் மணிவாசகர்

'பெண்மையனே ஆண்மையனே'

'இன்பமும் துண்பமும் இல்லானே உள்ளானே

எனவும் சிவன் தன்மை முரண்களைச் சுட்டியுள்ளார்.

**வண்ண முரண் :**

''இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட்டொனா'' தாயினும் 'அவனருளாலே அவன் தாள் வணங்கி அவனருளே கண்ணாகக் கொண்டு அவன்

திருவடிவங்களைக் கண்டு மகிழ்ந்த மணிவாசகர் 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' எனும் பரந்த நோக்கில் அவன் வடிவினையும் வண்ணங்களையும் சுட்டிக் காட்டியுள்ளார், அவ் வகையில் சிவன் வண்ணமுரண் திருவாசகத்துள்,

'வெளியாய் கரியாய்'
'பச்சையனே செய்ய மேனியனே'
'சேயதன்று வெளிதேயன்று'

எனவருந்தொடர்களால் சுட்டப் பெற்றுள்ளன.

இவ்வாறு மணிவாசகரால் சிவன் விகிர்தவடிவநிலை திரு வாசகத்துள் பல்வகையானும் சிறப்பித்துக் கூறப்பெற்றுள்ளது.



## பவழ விழா நாயகர்கள் வாழ்க பல்லாண்டு

செந்தமிழுக்கும் சிவநெறிக்கும் சிறப்புறப்பணியாற்றி வரும் சைவப் பாதிரியார் பேராசிரியர் பூ. சாம்பசிவம் அவர்களின் 70 ஆவது ஆண்டு நிறைவு விழா தூத்துக்குடியில் டிசம்பர் 15 முதல் மூன்று நாட்கள் சிறப்புற நிகழ்ந்தது. சான்றோர் பலர் பாராட் டுரை வழங்கினர்' உழவாரமும் தனது வாழ்த்தினைத் தெரி வித்துக் கொள்கிறது.

★ சிவநெறிச் செம்மல் திருத்தொண்டர் சிவத்திரு. தத்புருஷதேசிகர் (சொ. கிருஷ்ணன்) அவர்களின் எழுபத்தைந் தாவது ஆண்டு நிறைவு விழா 5-1-1998 அன்று திருவானைக் கோவிலில் சிறப்புற நிகழ்ந்தது. குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் திருவார் திரு. தெய்வசிகாமணி பொன்னம்பலதேசிக பரமாசாரிய சுவாமிகள் தலைமை வகித்து அருளாசி வழங்கினார். சான்றோர் பலர் கலந்து கொண்டு பாராட்டினர். உழவாரம் தனது வாழ்த்தினைத் தெரிவித்துக்கொள்கிறது.

## தன்வந்திரி Dr. V. சோமசேகர் மறைவு

உழவாரத்திற்கு நல்லாதரவு நல்கி வந்தவரும் பிரபல ஆயுர்வேத மருத்துவருமாகிய V. சோமசேகர் அவர்கள் எதிர் பாராத நிலையில் இறைவனடி சேர்ந்தார். அன்னாரின் மறைவு ஆன்மீக உலகிற்குப் பேரிழப்பு – மறைவால் வருந்தும் குடும்பத் தார்க்கு ஆறுதல் தரவும் அவர் இன்னுயிர் இறைவனடியில் அமைதியுறவும் உழவாரம் பிரார்த்தனை செய்கின்றது.

## செய்திகள்

பன்னிரு திருமுறை மன்றம் நாற்பத்து நான்காவது ஆண்டு நிறைவு விழாவை டிசம்பர் 3 முதல் 14ஆம் தேதி வரைச் சிறப் புறக் கொண்டாடியது. திருவாவடுதுறை இளைய சந்நிதானம் சீர்மிகு காசி விசுவநாததேசிக சுவாமிகள், செங்கோலாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் ஆகியோர் எழுந்தருளி அருளாசி வழங்கினர். திருமுறைப் பாராயணம்' சிவபூஜை, நாயன்மார் வழிபாடு, சான்றோர் போற்றுதல் அறிஞர் பேருரைகள் ஆகியன நிகழ்ந்தன.

★ திருவாதவூர் திருமறைநாத சுவாமிகள் கோயிலில் 15-12-97 அன்று 1008 சங்காபிஷேகமும் திருவாசக விழாவும் நடைபெற்றன. அமரர் தல ஓதுவார் யாழ்கீத சுந்தரம்பிள்ளை குடும்பத்தாரால் இவ்விழா நிகழ்ந்தது.

கலை அன்னை திருமதி. இராதா தியாகராசன் அறங் காவலர் குழுத்தலைத்தலைவர் இராம. இராமநாதன்செட்டியார் கலந்து கொண்டனர். புலவர். நீ.சி சுந்தரராமன் திருவாசகம் பற்றிப்.பேசினார். புலவர் யாழ். சுந்தரம் நன்றி கூறினார்.

★ மதுரை தியாகராசர் கல்லூரியின் தமிழ்த்துறை சார்பில் தமிழாகரர். Dr சுப. அண்ணாமலை திருமந்திரச்சிவ நெறி குறித்து 22-12-97 அன்று சொற்பொழிவாற்றினார். பேராசிரியர் Dr. ந. மாணிக்கம் வரவேற்றார்.

★ ஆங்கிலப் புத்தாண்டை முன்னிட்டு 19-ஆம் புனித நடை பயணம் பன்னிருதிருமுறை மன்றத்தாரால் திருவாதவூருக்கு 1—1—1998 அன்று மேற்கொள்ளப்பெற்றது. நூற்றுக்கணக் கான அன்பர்கள் திருமுறை தேதி புனிதநடை மேற்கொண் டனர். திருமோகூரில் திருமுறைக்காவலர் மு. கண்ணப்பன் அடி யவர்களுக்கு சிற்றுண்டி வழங்கி உபசரித்தார். திருவாதவூரில் மதுரை திருப்புகழ் சபையினர் சிறப்பு வழிபாடுகள் செய்வித்த னர். பாம்பன் மெட்டல் கம்பெனி V சுந்தரமூர்த்தி மாகேசுவர பூஜையும் அன்னம்பாலிப்பும் நிகழ்த்தினார்

★ திருக்குடந்தைச்சிவனடியார் திருக்கூட்டத்தின் பொன் விழா ஜனவரி 2, 3, 4, ஆகிய நாள்களில் சிறப்புற நிகழ்ந்தது. திருவாவடு துறை ஆதீனம் இளைய குருமாக சந்நிதானம், சூரியனார் கோயில் ஆதீனம், தருமபுரம் ஆதீனம் குருமகா

சந்நிதானங்கள், திருப்பனந்தாள் காசித்திருமடத்து அதிபர் ஆகியோர் எழுந்தருளி ஆசிவழங்கினர், புலவர் பெருமக்கள் விரிவுரையாற்றினர். தலைவர் கோப்பு. கோ. நடராஜன் செட்டியார் சிறப்புற ஏற்பாடுகள் செய்தார்.

★ திருக்குடந்தைத் திருமுறை மன்ற 334 ஆவது நிகழ்ச்சி 8—1—98 அன்று நிகழ்ந்தது கி. இராசகோபாலன பேசினார். செயலர் K.S.P.K. குஞ்சிதபாதம் வரவேற்றார்.

★ திருச்சி தாயுமானவர் திருக்கோயிலில் தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீகுருமகாசந்நிதானம் அவர்கள் 9—1—98 அன்று வழிபாடு செய்து திருப்பள்ளி எழுச்சி கல்வெட்டினைத் திறந்து வைத்தார்கள். கயிலைச்செல்வர் ப. மூக்கப்பிள்ளை கல்வெட்டினை உபயமாக அளித்தார்.

★ மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் நிகழ்ந்த திருவெம்பாவை விழாவில் திருமுறைக்காவலர் மு. கண்ணப்பன் அன்பளிப்பாக வழங்கிய திருவெம்பாவை, கொடிக்கவி. கல் வெட்டுகளை அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு. தமிழ்க் குடிமகன் திறந்துவைத்தார். ஆணையர் ச. மெய்கண்டதேவன் தலைமை வகித்தார். இணை ஆணையர் பாஸ்கரன் தக்க முறை யில் விழாவை ஏற்பாடு செய்திருந்தார்.

★ மதுரை பழம் நீ அறக்கட்டளை சார்பில் ஜனவரி 10, 11 ஆகிய தேதிகளில் கூட்டுவழிபாடு, கவியரங்கம் நிகழ்ந்தன. அமைப்பாளர் லெ மு.மு. முந்துமாணிக்கம் சிறபபான ஏற்பாடு கள் செய்திருந்தார்.

★ மதுரை இந்து நாடார் பக்த சபை சார்பில் 11-1-98 அன்று இளம்பிறை மணிமாறன் வில்லுக்கோர் விஜயன் என்ற தலைப்பில் பேசினார். A.P. தெய்வசிகாமணி நாடார் நன்றி கூறினார். 12-1-98 அன்று 108 திருவிளக்கு வழிபாடு நிகழ்ந்தது. 15—1—98 அன்று இளசை S. சுந்தரம் கடவுளைக் கண்டேன் என்பது பற்றிப் பேசினார்

★ மதுரைத் திருவள்ளுவர் கழகத்தின்சார்பில் திருப்புகழ் நம்பி க. பழனிச்சாமிக்கோனார் நிறுவியுள்ள அறக்கொடைச் சார்பில் தருமபுரம் மு. சிவச்சந்திரன் ஜனவரி 23, முதல் மூன்று நாட்கள் சொற்பொழிவாற்றினார்.

✯ மதுரை காமராசர் பல்கலைக்கழக சைவ சிந்தாந்தத் துறையின் சார்பில் 23-1-98 அன்று டாக்டர் மு. சிவச்சந்திரன் சைவ சித்தாந்தம் பற்றிப் பேசினார்.

✯ ஒன்பதாம் ஆண்டு பன்னிரு திருமுறைப் பெருவிழா திருநெல்வேலியில் ஜனவரி 24 முதல் மூன்று நாள்கள் நிகழ்ந்தது. திருச்சி ப. மூக்கப்பிள்ளை, சிதம்பரம் R. இராமலிங்கம் செட்டியார் மதுரை, பேரூர் செங்கோல் ஆதீனக்குருமகா சந்நிதானங்கள் கலந்து கொண்டு சிறப்பித்தனர். சிவ. ஆ. பக்தவத்சலம் சிறப்புற ஏற்பாடுகள் செய்திருந்தார்.

✯ மதுரை மாவட்டம் கோபிநாயக்கன்பட்டி ஸ்ரீவள்ளியப்ப நாடார் சத்திரிய வித்யாசாலை நடுநிலைப்பள்ளி பவழ விழா ஜனவரி 25, 26, தேதிகளில் சிறப்புற நிகழ்ந்தது. மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்தார் தேவாரம் ஓத அன்னலட்சுமி இராமநாதன் திருவிளக்கேற்ற விழாத்தொடங்கியது. அருள் நெறிச் செல்வர் S.K. செந்தியப்பநாடார் ஊர்வலத்தைத் தொடங்கிவைத்தார், சிந்தனை மேடை நடையெற்றது. சபைத் தலைவர் S. ராமநாதன் மலர் வெளியீடு செய்தார்.

## திருமுறைகளில் சமுதாய நோக்கு

**ஸ்ரீமத் குமாரசாமித் தம்பிரான்** எம்.ஏ,, எம்ஃபில்.,பி.எச்.டி

மக்கள் அறியாமையாலும் பசியாலும் வாடிக்கொண்டு இருக்கிறார்கள் – என சுவாமி விவேகானந்தர் கூறுகிறகூற்றும்,

''கல்விச்சாலை ஒன்றைத் திறப்பவன் சிறைச்சாலை ஒன்றை மூடுகிறான்'' என்று அறிஞர் விக்டர் ஹீஹோ கூற்றும்,

''தேடு கல்வி இல்லாததோர் ஊரினைத் தீயினுக்கு இரையாக்குவோம்'' என்று பாரதி கூறியதற்கு இணங்க கல்வி ஒவ்வொருவருக்கும் புகட்டப்பட வேண்டும். கல்வியறிவற்ற மக்கள் மாக்களாகத் திரிவர். இவர்கள் இருப்பதைவிட எமன் இவர்களை அழைத்துச் செல்வதே சிறப்பு.

அப்படிச் செய்யாத எமன் தவறு உடையவன் ஆவான் என்பதை,

''முன்னே அறியா மூர்க்க மாக்களை
இன்னே கொண்டேகாக் கூற்றம்
தவறுபெரி துடைத்தே தவறுபெரி துடைத்தே''

என்னும் கோபபிரசாதக் கூற்று உணர்த்துகிறது. கல்லா பக்களின் நெஞ்சில் இறைவன் இருக்கமாட்டான் எனும் கருத்தில்,

''கல்லா நெஞ்சின் நில்லானீசன்'' எனவரும் பாடல் பகுதி அறியாமையையும், கல்லாமையையும் சமயம் கண்டித்து இருக்கிறது என்பதை உணர்த்தும். இறைவன் கற்றோர் இடையே இருப்பான் என்பதனைக்,

''கல்வியில் கரையிலாத காஞ்சிமா நகர்தன் உள்ளான்'' என்று அப்பர் பெருமான் அருளுவார். இப்படிப்பட்டவர்களே பெரியோர்கள் எனப் பேற்றப்படுவது சமூகத்தினுடைய சிறப்பு அம்சமாகும். இதனைக் ''கற்றல், கேட்டல் உடையார் பெரியார்'' என்று சம்பந்தர் அருளுவார். இக்கல்வி நம்முடைய வாழ்க்கையில் எல்லா காலகட்டத்திற்கும் துணைசெய்வது என்பது மறுக்க முடியாத உண்மையாகும். உற்றாரோ, பொருளோ குறிப்பிட்ட அளவு வரைக்கும்தான் உதவ முடியும். இதனைத்,

''துணையதுவாய் வரும் தூயநற் கல்வியே''

என்று திருமூலர் அருளுவார். பெரும்பொருள் செலவிட்டாயினும் படிக்க வேண்டும் என்பதை,

''பொருள்நீத்தங் கொளவீசிப் புலன்கொளுவ மனம்
முகிழ்ந்த சுருள்நீக்கி மலர்விக்கும் கலைபயிலத் தொடங்
குவித்தார்'' என்று சேக்கிழார் அருளுவார்.

''சிந்தைமலர் சொற்றெளிவிற் செழுங்கலைகள் பயிலத்தம்
பந்தமற வந்தவரைப் பள்ளியினில் இருத்தினார்''

எனவரும் பாடற்பகுதியும் கல்விப்பெருமையை உணர்த்துவதே! எனவே இப்படிப்பட்ட கல்வியைக் கற்க வேண்டியது ஒவ்வொரு மனிதனுக்கும் தலையாய கடமையாகும்.

**உணவு கொடுக்கல் :**

பசியாலும். பட்டினியாலும் வாடிக்கொண்டிருக்கின்ற எத்தனையோ மனிதர்கள் கால்வயிற்றுக்கும் கஞ்சியில்லை என்று ஏங்கித் திரிந்துகொண்டிருக்கின்ற இந்தச் சமுதாயத்தில் வயிற்றுக்குச் சோறிட வேண்டும். இங்கு வாழும் மனிதருக்கெல்லாம் என்ற நோக்கத்திற்கு வித்திட்டவர்களே சமயச் சான்றோர்கள் எனலாம். பசி என்று வந்தவுடன் அந்த மனிதனுடையஇனத்தையோ, அவன் நடவடிக்கைகளையோ, தன்மைகளையோ பாராமல் அவனுக்கு உணவு அளிக்க வேண்டும்.

'யாவர்க்கும் இடுமின் அவரிவர் என்று நோக்கன்மின்'
'யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி'

என்று திருமூலர் உணர்த்துவார்.

மண்ணில் பிறந்த பயன் ஒருவனுக்கு எது என்று கேட்டால் அது அடியார்களுக்கு உணவளித்தல் என்பதே ஆகும்.

'கண்ணினால் ஒரு விழா காண்பது எது என்று கேட்டால்' அது உணவு அளித்தலே ஆகும். பசித்த ஒருவனுக்கு உணவிடுதல்' இறைவனுக்குச் சென்றடைதல் உண்மையே' இந்தச் சொல்லுக்கு எலும்பு பூம்பாவையாயிற்று. இக்கருத்தை விளக்கும் சம்பந்தர் அருளாற்றலால் சேக்கிழார் உணர்த்துகிறார்.

'மண்ணிற் பிறந்தார் பெறும் பயன்மதி சூடும்
அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்
கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்பார்தல்
உண்மை யாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார்'

உணவு கொடுக்க வேண்டும் எனக் கூறியதனால் வாங்கி உண்பதே கடமை என்று எந்தவொரு மணிதனும் சோம்பி இருந்துவிடக்கூடாது. வாழ்க்கையில் நம்மால் எந்த அளவுக்கு முடியுமோ அந்த அளவிற்கு உழைத்து உண்ணவேண்டும்.

''கண் சுமந்த நெற்றிக்கடவுள் கலி மதுரை
மண் சுமந்து கூலிக் கொண்டு'' என மணிவாசகர்;

அருளுவ்தால் ஆண்டவன் முதல் அனைத்துயிர்களும் உழைத்து உண்ண வேண்டும் என்பதே.

வாழ்க்கையில் இருக்கின்ற காலம் மிகக் குறுகியது. இக்காலத்தில் நாளும் நாளும் ''பொய்மையே பெருக்கி பொழுதினைச்சுருக்கி';

''பிழையே பெருக்கி அன்பினைச் சுருக்கி'' வாழக்கூடாது என்ற மணிவாசகம் நம்மை அறிவுறுத்தி எச்சரிக்கின்றது. எனவே வாழ்க்கையில் எப்படி வாழவேண்டும் என்பதற்குத் திட்டம் தீட்ட வேண்டுமே தவிர நினைப்பதையே வாழ்க்கையாக நின்று பொழுதை வீணே கழிக்கக் கூடாது.

''நினைப்பெனு நெடுங்கிணற்றை நின்று நின்றயராதே
மனத்தினை வலித்தொழிந்தே னவலம்வந் தடையாமை''

எனச் சம்பந்தர் கூறுவார்.

—தொடரும்

UZHAVARAM (Monthly) Regd No. TN / MA No 13/93
Licence No. 11, Licenced to Post Without Pre Payment
Date of Posting at Madurai Bazaar Post Office 27-1-98

உ
சிவமயம்
'என் கடன் பணிசெய்து கிடப்பதே'

**உழவாரம்**

ஆசிரியர் : கூடல்சுந்தரன்
துணை ஆசிரியர் : சிவ. பார்வதி B.Com. B.A.
மதுரைப் பன்னிரு திருமுறை மன்றத்திற்காக
வெளியிடுபவர்: C.S. சொக்கலிங்கம்
முகவரி : D. 89 பாரதியார் தெரு, டோர் நிர் 12, திருநகர், மதுரை - 6.
O ☎ 883086
அச்சு : அபிராமி அச்சகம், B-40 திருநகர், மதுரை-6. ☎ 883085

பெறுநர்
திரு N. திருநாவுக்கரசு B.O.L.
T/2 - சர்ச் 4வது தெரு,
T.T. நகர்,
அப்பர் அருகம்,
காரைக்குடி
630 002

புரவலர் கட்டணம் ரூ 1000/-
ஆயுள் சந்தா - ரூ. 250/- ஆண்டுச்சந்தா - ரூ. 25/-